நகரத்தார் இதழ்

சூன்-1989

(அறிவியல் இதழ்)

சுக்ல-ஆனி



தாமசு ஆல்வா எடிசன்
(திரைப்படம் & கிராமபோன்)
(அமெரிக்கா-1889)



பியர்டு
தொலைக்காட்சி



மார்கோனி
வானொலி
இத்தாலி-1902

ஆசிரியர்: சுப. செந்தமிழன்

# காவிரிப் பூம்பட்டினத்தில்
# பட்டினத்தடிகள் திருவிழா

காவிரிப் பூம்பட்டினத்தில் பட்டினத்தடிகள் திருவிழா சுக்ல வருடம் ஆடி மீ 22உ (6–8–89) ஞாயிற்றுக் கிழமை முதல் ஆவணி மீ 1உ (17–8–89) வியாழக்கிழமை வரை சிறப்பாக நடைபெற உள்ளது.

**நிகழ்ச்சி விபரம்**

ஆடி மீ 22உ (6–8–89) ஞாயிறு – திருவெண்காடராகிய பட்டினத்தடிகள் திருவவதாரம்

ஆடி மீ 23உ (7–8–89) திங்கள் – சிவதீட்சை பெற்றுக் கொள்ளுதல்.

ஆடி மீ 24உ (8–8–89) செவ்வாய் – திருவெண்காடா திருக்கல்யாணம்.

ஆடி மீ 25உ (9–8–89) புதன் – மருதவாணர் குழந்தையாய் எழுந் தருளல்.

ஆடி மீ 26உ (10–8–89) வியாழன் – கப்பல் யாத்திரை, துறவறம் மேற் கொள்ளுதல்.

ஆடி மீ 27உ (11–8–89) வெள்ளி – அப்பம் அளித்தலும், வீடு தீப்பற்றி எரிதலும்

ஆடி மீ 28உ (12–8–89) சனி – ஞானகலாம்பிகை பரி பூரணமடைதல்.

ஆடி மீ 29உ (18–8–89) ஞாயிறு – திருவாரூர்ப் பிள்ளை -யைப் பிழைப்பித்தல் இரவு கழுமரம் எரித்தல்

ஆடி மீ 30உ (14–8–89) திங்கள் – பத்திரக்கிரியாரும், நாயடியாரும், அடி கள் அருளால் மோட்சமடைதல்

ஆடி மீ 31உ (15–8–89) செவ்வாய் – பட்டினத்தடிகள் குரு பூசை

ஆடி மீ 32உ (16–8–89) புதன் – பஞ்சமூர்த்திகளும், திரு வெண்காடரும் இடப வாகனக் காட்சியுடன் தீர்த்தம் கொடுத்தல்

ஆவணி மீ 1உ (17–8–89) வியாழன் – ருத்ராபிஷேகமும், விடையாற்றியும்

ஓம்
தாய் தீப்பாய்ந்தாளுக்குவணக்கம்
தமிழ் அன்னைக்கு வணக்கம்

# நகரத்தார் இதழ்


மலர்: 3  இதழ் 1



ஆசிரியர்:

**சுப. செந்தமிழன்**
5, யானைக்கார சந்து
மீனாட்சி அம்மன் கோவில் தெரு
(அம்மன் சன்னதி அருகில்)
மதுரை-1



**ஜூன் - 1989**
(சுக்ல—ஆனி)

நன்கொடை
தனி இதழ் ரு. 2/-


தமிழ்நாடே வாழ்க—எம்
தாய்நாடே வாழ்க-
அமிழ்தாகிய இயலிசை கூத்தென்னும்
தமிழாகிய உயிர் தழையும் விழுமிய தமிழ்நாடே
வாழ்க!

—புரட்சிக் கவிஞர்
பாரதிதாசனார்

## நகரத்தார் இதழின் வயது மூன்று



நகரத்தார் இதழ் இரண்டு ஆண்டுகளை நிறைவுச் செய்து மூன்றாவது ஆண்டில் தனது பணியை தொடருகின்றது. நகரத்தார் இதழின் வளர்ச்சிக்கு ஆதரவாக வளர்காப்பு நிதி (நன்கொடை) அனுப்பி, விளம்பரங்கள் தந்து ஆதரவு தருமாறு அன்புடன் கேட்டுக்கொள்கின்றேன். நல்ல பணிக்கு ஆதரவு தாருங்கள். உங்கள் ஆதரவு பெருகினால் இதழின் அமைப்பு மிகச் சிறப்பாக அமையும்.

இப்படிக்கு,
சுப. செந்தமிழன்
10—6—89

---

## நகரத்தார் இதழின் முகவரி மாற்றம்.

மே 1989 இதழ் வரையில் எண், 8, ராசசேகரன் தெரு, சிவகங்கை – 623560, பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம் என்ற முகவரியிலிருந்து வெளிவந்த நகரத்தார் இதழ் சூன் 1989 இதழ் முதல் கீழ்கண்ட முகவரியிலிருந்து வெளி வரவுள்ளது தொடர்பு கொள்ள விரும்புபவர்கள் கீழ்கண்ட முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

ஆசிரியர் - சுப. செந்தமிழன்,

நகரத்தார் இதழ்,
5, யானைக்கார சந்து,
மீனாட்சி அம்மன் கோவில் தெரு,
(அம்மன் சன்னதி அருகில்)
மதுரை-1

# உங்கள் எண்ணங்களே எமது நூலியங்கம்

## அண்ணாமலைப் பல்கலைக் கழக இணைவேந்தர்

டாக்டர் M. A. M. ராமசாமி அவர்களின் கருத்தை ஏற்று செயலாக்குக.

பசும்பொன் மாவட்டத்தை கல்வியில் பின் தங்கிய மாவட்டமாக அறிவிக்கவேண்டும்: நகரத்தார்களை கல்வியைப் பொறுத்தாவது பிற்பட்டவராக அறிவிக்க வேண்டும்.

டாக்டர் M. A. M. ராமசாமி

டாக்டர் M. A. M. ராமசாமி அவர்களின் இக்கருத்து ஏற்றுக் கொள்ளத்தக்க, ஏற்றுக் கொள்ளப்பட வேண்டிய கருத்தாகும். அரசின் கணிப்பின்படி நாம் முற்பட்ட வகுப்பினர். இன்றைக்கு நம்மவரில் ஒருசிலரைத் தவிர பெரும் பாலோர் சாதாரண நிலையிலுள்ளனர். அரசியல் வாதிகளுக்கும், அரசுக்கும் இந்த உண்மை தெரியும். தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களும், அரசியல்வாதிகளும் இப்பிரச்சனையை மனிதநேய மனப்பான்மையுடன் நோக்கி கல்வியைப் பொறுத்தவரையாவது எங்களை பிற்பட்டவராக அறிவிக்கவேண்டும். நாங்கள் விரும்பும் கல்வியைக் கற்க, (மருத்துவக்கல்வி, தொழிற்கல்வி) எங்களுக்கு தடை விதிக்கக்கூடாது. எங்களது இந்த நியாமான கோரிக்கையை டாக்டர் M. A. M. ராமசாமி அவர்கள் விடுத்துள்ள நியாமான வேண்டுகோளை தமிழக முதல்வர் கலைஞர் அவர்கள் ஏற்று செயல்படுத்துவார் என்று நம்புகின்றேன், டாக்டர் கலைஞர் அவர்கள் எல்லா பிரச்சனைகளையும் மனித நேயத்துடன் நோக்கி செயல்படுத்தி வருகின்றார். எனவே இப்பிரச்சினைக்கும் நியாயமான நீதியானமுடிவை அளித்து அதாவது நகரத்தார்களை கல்வியைப் பொறுத்தவரையாவது பிற்பட்டவராக அறிவித்திடவேண்டுமாய் அன்புடன் கேட்டுக்கொள்கின்றேன்.

கண. ராமநாதன்
அம்பத்தூர் - சென்னை

## எழுத்தின் கதை

## டாக்டர் மு. வ. அவர்களின் நூலிலிருந்து

ஆசிரியர் அண்ணாமலை – சிவகங்கை



**சித்திரஎழுத்துக்கள்:** எழுத்தின் தொடக்கம் சித்திர எழுத்திலிருந்து தொடங்குகின்றது. ஆயிரங்கால படங்களை வரைந்தே முற்கால மனிதர்கள் மொழியை வளர்த்தார்கள். நமது மொழியாகிய தமிழும் ஒரு காலத்தில் படங்கள் எழுதியே வளர்க்கப்பட்டது. பழைய எழுத்துக்களுக்கு கண்ணெழுத்து, கோலலெழுத்து என்ற பெயர்களும் இருந்தன. சீனாவில் முதலில் எழுத்துக்கள் படவடிவிலயே இருந்தன. சப்பான் எழுத்துக்கள் சீனாவிலிருந்து கடன் வாங்கிய எழுத்துக்கள் ஆகும்.

**ஆப்புவடிவஎழுத்துக்கள்:** பெசபடோமியாவில் எழுத்துக்களை எழுத களிமண்ணையே பயன்படுத்தினார்கள். ஈரக் களிமண்ணில் ஒரு சிறு குச்சியின் முனையைச் சாய்த்து அழுத்தினால் உடனே களிமண் ஒரு பக்கத்தில் கொஞ்சம் மேலே பிதுங்கியது போல் வரும். மேலே வந்த அந்த களி மண் அம்பு முனைபோல், ஆப்புப்போல் இருக்கும். அதனுல் இந்த எழுத்து ஆப்புவடிவ எழுத்து எனப் பெயர் பெற்றது. களிமண்ணைப் பலகைப்போல் செய்து இந்த ஆப்பு எழுத்துக்களை எழுதி அந்த களிமண்ணை வெயில் காயவைப்பார்கள். ரோமபுரி, ஏதென்சு ஆகிய நாடுகளில் ஆப்பு வடிவஎழுத்துக்களே ஆதிகாலத்தில் இருந்தது. சாஹென்றி ராலின்ஸ்தான் கடும் முயற்சி செய்து ஆப்பு வடிவ எழுத்துக்களைப்பற்றிய விபரங்களை உலகிற்கு தந்தார். இன்றைக்கு எழுத்துக்களிலுள்ள கோடுகளை ஆப்புவடிவ எழுத்துக்கள் வழியே கற்றுக் கொண்டோம்.

**அரபிஎழுத்துக்கள்:-** செமிட்டிக் எழுத்துக் களிலிருந்து வளர்ந்தது அரபி எழுத்து 1,2,3 ஆகிய எண்களின் தாயகம் அரபியாகும். முதன் முதலில் ஏற்பட்ட அரபிய எழுத்துக்கு "குபியா" என்று பெயர். குபா என்ற நகரத்தின் பெயரால் வந்ததே குபியா எழுத்து. இன்றுள்ள அரபிய எழுத்து இருபத்தெட்டு மெய்யெழுத்துக்களை கொண்டது.

சீன எழுத்துக்கள்: சீனர்கள் எழுதுக்களுக்கு உருவங்கள் என்றே பெயர் சொல்லுகின்றார்கள். ஒருகாலத்தில் சீனர்களிடம் 40,000 எழுத்துக்கள் இருந்தன. இப்பொழுது ஏறக்குறைய 200 எழுத்துக்கள் உள்ளன. சீன எழுத்துக்கள் மேல்லிருந்து கீழ் நோக்கி எழுதப்படுகின்றது. சீன மொழியில் பேச்சுமொழி வித்தியாசமாக இருந்தாலும் எழுத்து மொழி ஒன்றேயாகும்.

தமிழ்எழுத்துக்கள்: முதலில் தமிழ் எழுத்துக்கள் சித்திர எழுத்துக்களாக இருந்தன. பின் வட்டவடிவ எழுத்துக்களாக இருந்தன. இப்பொழுதுள்ள தமிழ் எழுத்துக்கள் ஏற்பட்டு ஆயிரத்துமுந்நூறு ஆண்டுகள் ஆகின்றன. தமிழ் எழுத்துக்களில் வளைவுகளும், சுழிகளும் அதிகமாக இருப்பதற்கு காரணம் நம்முடைய முன்னோர்கள் முற்காலத்தில் பனை ஓலையில் இரும்பு எழுத்தாணியை கொண்டு எழுதினார்கள். அதில் எழுதும்போது ஓலை கிழியாமால் இருக்க வேண்டுமென்றால் இப்படி வளைவுகளும், சுழிகளும் இருந்ததால் தான் எழுதமுடியும்.



## சிந்தனையாளர் கன்பூசியஸ் பொன்மொழிகள்

1. சிந்திக்காமல் படிப்பது மனதில் குழப்பத்தைத் தோற்றுவிக்கும்: படிக்காமல் சிந்திப்பது மனதில் சமநிலையை கெடுத்து விடும்.

2. கல்வி செய்யுட் கோவையுடன் தொடங்குகின்றது தக்க நல்லலொழுக்கத்தினால் ஊற்றமடைகின்றது. இசை பயிற்சியினால் நிறைவு பெறுகின்றது.

3. நினைவாற்றலைப் போற்றும் கல்வி மக்கள் கேட்கும் கேள்விகளுக்கு பதிலளிக்க உதவும். ஆனால் சிறந்த ஆசிரியனாக இயங்க உதவாது.

- கன்பூசியஸ்

## கம்ப்யூட்டர் (நுண்கணிப்பொறி)

S. பழனியப்பன் M.Sc
திருவெற்றியூர் - சென்னை

1) டிகிட்டல் கால்குலேட்டர் (2) ஹோம் கம்ப்யூட்டர்
ஹோம் கம்ப்யூட்டர்: இந்த குட்டிக் கம்ப்யூட்டர் பள்ளி மாணவ, மாணவிகளுக்கு அடிப்படை முதல் மேல் வகுப்பு வரை ஆசிரியரின் உதவியின்றி பாடம் சொல்லிக்கொடுக்கும். பெண்களுக்கு சமையல் கற்றுக் கொடுக்கும். செஸ் ஆடும். 1078ல் அமெரிக்காவில் பி.ஸி எனப்படும் பர்சனர் கம்ப்யூட்டர் நடைமுறைக்கு வந்தது. 1946ல் நிறுவப்பட்ட ஏனியாக் (ENRAL) முதல் கம்ப்யூட்டராகும். இந்த கம்ப்யூட்டரில் 17.468 வால்வுகள் இருந்தன. 1964 மே நாளில் கம்ப்யூட்டரில் இரண்டு மாற்றங்கள் நிகழ்ந்தன. முதலில் பேசிக்மொழியைப் பயன்படுத்த கம்ப்யூட்டர்களுக்கு ஆணை கொடுக்கப்பட்டது. அதோடு ஒரே நேரத்தில் பலர் ஒரு கம்ப்யூட்டரை பயன்படுத்தும். (TIME SHARING) (டைம் ஷேரிங் முறை) நிருபித்துக் காட்டப்பட்டது.

பயன்படுத்தும் முறை:- கம்ப்யூட்டரை பயன் படுத்த வேண்டுமானால் வீட்டில் டி.வியும், காசட் டேப்ரிகார்டரும் இருக்க வேண்டும். முதலில் கம்ப்யூட்டரை வயரினால் காசட் ரிகார்ட்ரோடும், மற்றொரு வயரில் டி.வி யோடும் இணையுங்கள். காசட்டை ரிக்கார்டரில் போட்டு ஆன் செய்யுங்கள் காசட் சுழல ஆரம்பிக்கும். காசட்டில் பதியப் பட்டுள்ள எல்லா விபரங்களையும் கம்ப்யூட்டர் கீ-போர்டில் பதிய வைத்துக்கொள்ளும். பின்னர் தேவையான பொழுது கம்ப்யூட்டரை பயன்படுத்தி விபரங்களை தெரிந்து கொள்ளலாம். டி.வி மூலமும் பார்த்துக் கொள்ளலாம்.

ச, ரி, க, ம, ப, த. நி, என்பதற்கு விளக்கம்

1. ச - சட்ஜம்
2. ரி - ரிஷபம்
3. க - காந்தரம்
4. ப - பஞ்சமம்
5. நி - நிஷாதம்
6. ரி - ரிஷ்பம்
7. ம - மத்யமும்
6. த - தைவம்

பண்டைத்தமிழர் கூறியது குரல், துத்தம், கைகிளை, உழை, இளி, விளரி, தாரம்.

– சிலப்பதிகாரம்

## நாம் தெரிந்து கொள்ளவேண்டிய செய்திகள்

S. சோலையப்பன் பாகனேரி.

1) சென்னைப் பல்கலைக் கழகம் அழகப்பசெட்டியார் தொழில் நுட்பக் கல்லூரியை நடத்துகின்றது.

2) சென்னை பல்கலைக் கழகத்தின் முதல் இந்தியத் துணைவேந்தர் சி. சுப்பிரமணியன் (1904)

3) இந்தியாவின் மூத்த தொழில் கல்லூரி கிண்டி காலேஜ் ஆப் எஞ்சினியரிங்

4) பேராசிரியர் VR. முத்து வீரப்பன் அவர்கள் சூரிய வெப்பத்தைப் பயன்படுத்தி நெல் மணிகளை உதிர வைக்கும் இயந்திரங்களை கண்டு பிடித்துள்ளார்.

5) தென்ஆற்காடுமாவட்டம், சிதம்பரம், அண்ணாமலை நகரில் அண்ணாமலை அரசரால் 14—6—1920 அன்று தனது அன்னை மீனாட்சி பெயரில் தொடங்கப்பட்ட மீனாட்சி கல்லூரி 1929ல் அண்ணாமலைப் பல்கலைக்கழகமாக உருவாகியது.

6) 11—8—1947ல் காரைக்குடி காந்தி மாளிகையில் அழகப்பா கல்லூரி தொடங்கப்பெற்றது. 1981ல் அழகப்பா கல்லூரி அழகப்பா பல்கலைக்கழகமாகி அரசின் கீழ்வந்தது.

7) சென்னைப் பல்கலைக்கழகம் தொடக்கம் : 1857

| | | |
|---|---|---|
| மதுரை காமராசர் பல்கலைக்கழகம் | ,, | : 1978 |
| தமிழ்ப் பல்கலைக்கழகம் - தஞ்சாவூர் | ,, | : 1981 |
| பாரதியார் பல்கலைக்கழகம் - கோவை | ,, | : 1982 |
| பாரதிதாசன் பல்கலைக்கழகம் திருச்சி | ,, | : 1986 |

8) திருவாங்கூர் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறை தொடங்க வள்ளல் அழப்பர் வாரி வழங்கியுள்ளார்.

9) ஈபோவில் செட்டியப்பன் என்பவர் தொடங்கிய கலாசாலைதான் அங்குள்ள பள்ளிகளுக்கு எல்லாம் முன்னோடியாகும்.

1) சென்னை நகரத்தார் ஐக்கிய சங்கம் 88 பவளக் காரத் தெரு, சென்னை

2) திருச்சி நகரத்தார் சங்கம் நகரவிடுதி, 2, ஒத்தமால்தெரு திருச்சி-2

3) மதுரை நகரத்தார் சங்கம் நகரவிடுதி, 25 வடக்குச் சித்திரை வீதி, மதுரை

4) சேலம் நகரத்தார் சங்கம் B9, பேர்லாண்ட்ஸ், சேலம்

5) அம்பத்தூர் நகரத்தார் சங்கம் 10, Red Hills Road, அம்பத்தூர் - சென்னை

# பென்சிலைப் பற்றிய உண்மைகள்

பென்சில் சாதாரணப் பொருளாகத் தோன்றலாம். ஆனால் அது சக்தி வாய்ந்த பொருளாகும். ஆங்கிலத்தில், அனைத்தும் ஒரு பென்சிலிருந்தே ஆரம்பமாகின்றன (Every ihing begtns with a pencil) என்று ஒரு பழமொழி கூட உண்டு. ஒரு சிறு சட்டை தைப்பதாக இருந்தாலும் ஒரு போர்க் கப்பல் தயாராக இருந்தாலும், பெரிய அணைக்கட்டு, பல மாடிக் கட்டடம், நகர நிர்மாணம் இப்படி எதற்கும் முதலில் நாடப்படுவது பென்சிலே! மனிதனின் அறிவுக்கு உருக் கொடுக்க உதவும் கருவி பென்சில் தான். மூளைக்கு அடுத்துச் செயல்படுவதும் அது தான்.

ஆதியில் மனிதன் பறவை வால் இறக்கையையே ஒரு வித மையில் தொட்டு, எழுதினான். அக்கால ரோமானியர்கள் இந்தச் சிறகுத் தூரிகையை பென்சில்லஸ் என்று அழைத்தார்கள். இதற்குச் சிறிய வால் என்பதே உண்மையான அர்த்தம். இந்த பென்சில்லஸ் என்ற ரோமானியச் சொல்லிலிருந்து தான் பென்சில் என்ற சொல்புழக்கத்திற்கு வந்தது. அதுவே நின்று நிலைத்து விட்டது.

16ஆம் நூற்றாண்டு வாக்கில் தான் நிலக்கரி போன்ற கறுப்புக்களி மண்ணைக் கடையப்பட்ட மரத்தினுள் வைத்து எழுதி வந்தார்கள். ஆனால் இக்காலப் பென்சிலோ 40 வகையான வெவ்வேறு பொருட்களைக் கொண்டு தயார் ஆகிறது.

சாதாரணமாக, பென்சில் தயாராவதற்குப் பெரிதும் தேவை நல்ல கிராப்பைட் ஆகும். இது இலங்கையிலும் மடகாஸ்கரிலும் மெக்ஸிகோ நாடுகளிலும் ஏராளமாகக் கிடைக்கிறது. இதற்கான களி மண் ஜெர்மனியிலிருந்துவருகிறது. இதற்குத் தோதான செடார் என்ற மரம் கலிபோர்னியாவிலிருந்தும் தருவிக்கப் படுகிறது. ஏறக்குறைய 300 இரகங்களில் பென்சில்களைத் தயாரிக்கிறார்கள். ஆபரேஷன்களின் போது, நோயாளியின் தோலின் மீது குறியீடு இடுவதற்குக் கூடத் தனிப் பென்சில்கள் உள்ளன,

இந்தியாவில் தினமும் 1.44 மில்லியன் பென்சில்கள் தயாராகின்றன. இந்திய பென்சில் பாக்டரிகள் சராசரியாக 100 குரோஸ் பென்சில்களைத் தயாரிக்கின்றன. தாரா

பூர் அருகே உள்ள கேம்லின் பென்சில் தொழிற்சாலையும் பம்பாய் அருகில் உல்ஹாஸ் நகரிலுள்ள இந்துஸ்தான் பென்சில் தொழிற்சாலையும் மட்டும் இதற்கு விதி விலக்குகள். அவை நாளொன்றுக்கு 1500 குரோஸிலிருந்து 2000 குரோஸ் பென்ஸில்கள் வரை தயாரிக்கின்றன. இந்த இந்தியப் பென்சில்களுக்கான மூலப் பொருட்களான கிராபைட், முக்கியமாகப்பீகார்ச் சுரங்கங்களிலிருந்தும், களிமண் ஆந்திரப் பிரதேசத்திலுள்ள கோதாவரி டெல்டா பகுதியிலிருந்தும் கிடைக்கின்றன. இவற்றிற்கான மரங்கள் உள்நாட்டிலும் அந்தமானிலிருந்தும் கிடைக்கின்றன.

ஒரே அளவில் உள்ள இந்தியப் பென்சிலையும் அமெரிக்கப் பென்சிலையும் எடை போட்டால் அமெரிக்கப் பென்சிலைப் போல் இந்தியப் பென்சில் இரண்டு மடங்கு அதிக எடை உள்ளதாக இருக்கும்.

சாதாரணமாக 18 சென்டிமீட்டர் நீளமுள்ள ஒரு பென்சிலால் 55 கிலோ மீட்டர் நீளமுள்ள ஒரு கோட்டைப் பேப்பர் போன்ற பகுதியில் போடலாம். அல்லது, 45,000 சொற்களை எழுதலாம்.

நன்றி - கல்கண்டு

## முன்னேற்றத்திற்கு வழிகாட்டி

Central Services Examinations எழுத முன் வரும்படி நம் இளைஞர்களுக்கு வேண்டுகோள். முன் இதழில் விடுத்திருந்தேன். இவை பற்றி மேலும் சில விவரங்களை இங்கு கொடுத்திருக்கிறேன். I A.S, I.P.S, I.F.S போன்ற சர்வீசுகளே எல்லோருக்கும் தெரிந்தவை. தெரியாதவை இவை போல மொத்தம் 27 Central Services உள்ளன என்பது தான். எல்லா servicesகளுக்கும் ஒரே அடிப்படைத் தேர்வுகள் தான் நடத்தப்படுகின்றன. இவை பற்றிய முழு விவரங்களும் Employment News Special Supplementல் வெளியாகின்றன Paragraph தேர்வுகள் மூன்று நிலைகளில் நடக்கின்றன. முதல் கட்டமான Prelminary Examinationகளை வருடந் தோறும் 90,000 பேர் எழுதுகிறார்கள். வருடா வருடம் எழுதுபவர்களின் எண்ணிக்கை கூடிக்கொண்டே போகிறது. இதில் தேர்வு பெறும் 10,000 பேர் இரண்டாம் நிலையான Main Examination எழுதுகிறார்கள். இவர்களில் 1500பேர் தேர்வு செய்யப்பட்டு நேர்முக தேர்வுக்கு அழைக்கப்படுகிறார்கள் இவர்களில் தேர்வு

பெறுவது700பேர் மட்டுமே. முதல்நிலைக்கான application forms கிடைக்குமிடம் Secretary, U.P.S.C DholpurHouse New Delhi 110011. இத்தேர்வுகளை சென்னை, மதுரை பெங்களூர் நகரங்களில் எழுதலாம். 3 attempts are allowed, 26 வயதுக்குட்பட்ட, பட்டப் படிப்பு படித்தவரே இவற்றில் பங்கு கொள்ளலாம். முதல்நிலை தேர்வில் 2 பேப்பர்கள்: general studies முதல் பேப்பர், 150 மார்க்குகள், multiple choice questions இரண்டாவது பேப்பர் 300 மார்க்குகள் optional subjects list 22ல் ஒன்றை தேர்ந்தெடுத்து அதில் தேர்வு எழுதவேண்டும். Commerce Economics, Zoology போன்ற 22 subjects syllabiயைப் பார்த்தால் சற்றுக் கடினமாகத் தான் தோன்றுகிறது. இதில் தேறியதும் Main Examinatiosகளை எதிர் கொள்ளவேண்டும். மொத்தம் 8 பேப்பர்கள், ஒவ்வொன்றுக்கும் 300 மார்க் Conventional essay type questions 3 மணி நேர கால அளவு paper-1: one of the Indian Languages, paper 2: English, பேப்பர் 3, 4: General studies பேப்பர் 5, 6, 7, 8: any two subjects to be selected among 27 optional subjects 2 papers in each of the 2 subjets. Agriculture முதல் Zoology வரை 27 optional subjects உள்ளன. Language papers இரண்டுக்கும் matriculation standard, optional subjectsகளின் தரம் மிகவும் அதிகம். பேப்பர்கள் 1, 2 தவிர மற்ற 9 பேப்பர்களையும் தமிழிலும் எழுதலாம்.

நம் தமிழ்நாட்டு மாணவர்கள் அதிகம் தேர்வு பெறாததற்கு முக்கிய காரணம் நம் கல்வித் தரம் மிகவும் குறைவு என்பதாகும். இருப்பினும் மனம் தளராது நன்கு உழைத்து படித்து தயார் செய்து கொள்ள வேண்டும். நம் கருத்துக்களை தெளிவாக, பிழைகள் இல்லாமல் எழுத சொல்லப் பழகிக்கொள்ள வேண்டும். கடைசியாக வருவது நேர்முகத் தேர்வு. இதில் 6,7 பேர்கள் கொண்ட ஒருகுழு உங்களுடைய personality, suitability for the central services முதலியவற்றைச் சோதித்துப் பார்க்கும் அவர்களுடைய கேள்விகளைக் கண்டு மருளவோ, பின்வாங்கவோ, மவுனம் சாதிக்கவோ கூடாது அவர்கள் சோதிக்கும் உங்கள் மற்ற குணங்கள்: social traits, interest in curent affairs mental alertness balance of judgement, intellectual and moral integrity முதலியன.

So wish you all good luck.

இந்த விவரங்களைச் சேகரிக்க உதவிய திரு அரும்பாக்கம் AN. அண்ணாமலைக்கு என் நன்றி.

இராம. குமரப்பன்.

உ

ஓம் சக்தி

# "வள்ளல்" என முதல் வாழ்த்து

நாட்டோர் வியக்கக் கோட்டையூரில் சிறப்புறத் திருமணத்தை நடத்தியமைக்காக கோட்டையூர் நகரத்தார்கள் (வள்ளல்) அழகப்பருக்குப் பாராட்டு விருந்தொன்றளிக்க ஏற்பாடு செய்தனர். இவ்விழாவில் தலைமைதாங்கி சிறப்புச் செய்வதற்கு செட்டி நாட்டரசர் அண்ணாமலை செட்டியார் வருகை புரிந்தார். அக்கூட்டத்தில் கல்விப் பணிக்கென அள்ளி அள்ளிக் கொடுக்க முற்பட்டுள்ள அழகப்பரை ''வள்ளல்'' எனப் போற்ற வேண்டும் என முதன்முதலாகப் பலர் அறியச் சொல்லி வாழ்த்தினார். பாராட்டுக்கு நன்றிகூறிப் பேச எழுந்த அழகப்பர் மிகுந்த தன்னடக்கத்துடன் ''ராஜாசர்'' அவர்கள் ''வள்ளல்'' என்று என்னைச் சொல்லி விட்டார்கள். நான் ஏதோ சிறு அளவில் கல்விப் பணிக்கு உதவி செய்யக் கருதினேன் என்று வைத்துக்கொண்டால், செட்டி நாட்டு அரசர் அவர்கள் பல நூறு மடங்கு செய்து ஒரு பல்கலைக்கழகத்தையே உருவாக்கியிருக்கிறார்கள் - செட்டி நாட்டு அரசர் அவர்களின் தொண்டு வெளிப்படையாகப் பலருக்குத் தோன்றாமல் இருக்கலாம். ஆனால் பெரிது பெரிது தான். ஐஸ் கட்டியைத் தண்ணீரில் போட்டால், தண்ணீருக்கு மேலே கொஞ்சம் தான் தெரியும். பெரும் பகுதி தண்ணீருக்குள் ஆழ்ந்திருக்கும். அதுபோல செட்டி நாட்டு அரசர் அவர்களின் தர்ம கைங்கரியங்கள் எல்லாம் தண்ணீருக்குள் அமிழ்ந்திருக்கும் ஐஸ் கட்டியைப் போன்றவை என்றார். இம்முகமனுரையை ஏற்க மாட்டேன் என அண்ணாமலை அரசர் தலையை அசைத்து மறுத்தபோது ''அப்படியானால் என்னை ஒரு 'குட்டி வள்ளல்' என்று வேண்டுமானால் சொல்லுங்கள்'' என்று இசைந்தாராம் அழகப்பர்.

பேராசிரியர் திரு. சு. குழந்தைநாதன் எழுதிய ''கோடி கொடுத்த கொடைஞன்'' என்ற நூலிலிருந்து .. ...

எழுதியவர்:- ராம. வ. ராமசாமி, கோட்டையூர் -623 106

# அலவாக்கோட்டை சிவன் கோவில் திருக்குட நன்னீராட்டு விழா.

வைகாசி 23உ 5—6—89 திங்கள் கிழமை

இராம. கண்ணப்பன்
இராமனாதன் மருந்தகம், சிவகங்கை.

பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம், சிவகங்கை வட்டம் மதகுபட்டியிலிருந்து இரண்டு மைல் தொலைவில் உள்ளது அலவாக்கோட்டை. அவ்வூரின் பழைய பெயர் பாறைப்பட்டியாகும். அடுத்து அதன் பெயர் ஆபரண நல்லூர் ஆபரணம் செய்யும் ஆசாரிகள் மிகுந்திருந்த காரணத்தால் ஆபரண நல்லூர் என்று பெயர் ஏற்பட்டது. பின் அலவாக்கோட்டை எனப் பெயர் வந்தது. அலவாயக கண்மாயில் அலைகள் கோட்டைபோல் வருவதால் அலவாக்கோட்டை எனப் பெயர் பெற்றது.

இவ்வூரிலுள்ள சொக்கலிங்க மீனாட்சி அம்மன் நகரச் சிவன் கோவிலில் குடமுழுக்கு நன்னீராட்டு விழா 5-6-89 அன்று காலை 9 லிருந்து 9.30க்குள் சிறப்பாக நடைபெற்றது. குடமுழுக்கு விழாவை மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் பழ. முத்தப்பன் அவர்கள் மிகச் சிறப்பாக நேர்முக வர்ணனை செய்தார்கள். 62 ஆண்டுகளுக்கு முன் இக்கோவிலின் குடமுழுக்கு நன்னீராட்டு விழா நடந்துள்ளது. 62 ஆண்டுகளுக்கு முன்பு வேறிடத்திலிருந்து சிவனையும், அம்மனையும் தற்பொழுதுள்ள இடத்திற்கு கொண்டு வந்து ஆலயத்தை நிர்மாணம் செய்து குடமுழுக்கு விழா செய்துள்ளனர். சின்னன் செட்டியார் குடும்பத்திற்கு இந்தப் பெருமை சாரும். 5—6—89 அன்று 9 கோபுரங்களுக்கு குடமுழுக்கு நன்னீராட்டு விழா சிறப்பாக நடந்தது. நாட்டரசன் கோட்டை சுப. ராம. லெ. ராமகிருட்டிணன் செட்டியார் மனைவி வள்ளியம்மை ஆச்சி அவர்கள் கோவிலில் கொடி மரம் நிறுவியுள்ளார். குடமுழுக்கு நந்நீராட்டு விழா குழுத் தலைவர் சி.ந. ராமநாதன் செட்டியார் அவர்களும், செயலாளர் பழ. நாகப்பச் செட்டியார் அவர்களும், அண.அரு.சித. சுப்பிரமணியன் செட்டியார் அவர்களும், செல்வமணி என்ற ராமனாதன் அவர்களும் மிகச் சிறப்பாகச் செயல்பட்டு குடமுழுக்கு நன்னீராட்டு விழாவை சிறப்பாக நடத்தினார்கள் ராசாமணி என்ற கண்ணப்பச் செட்டியார் அவர்களும் இக் குடமுழுக்கு நன்னீராட்டு விழா சிறப்பாக நடைபெறுவதில்

ஆர்வத்துடன் பங்கு கொண்டு செயல்பட்டார். இறைவன் அருள் வழங்குவதுபோல் மழையும் மாலையில் பெய்தது குறிப்பிடத்தக்கது. மாற்றூரில் உரையூரைச் சார்ந்த சி. வகையினர் மாற்றூர் அரும்பாக்கூர் பங்காளிகள், மணலூர், கருப்பூர் பங்காளிகள், பிள்ளையார்பட்டி பங்காளிகள். வயிரவன் கோவில் பங்காளிகள் ஆகியோருக்கு இக் கோவில் உரியது.

## முயற்சியால் முன்னேறியவர்

நம் சமுதாயத்தைச் சேர்ந்தவரும், கொல்லங்குடி அழகாபுரி திரு உ. அ. சா. உ. உடையப்பச் செட்டியார் அவர்கள் புதல்வர் சண்முகநாதன் B.A., A. I. C. W. A., சென்னைத் துறைமுகத்தில் அக்கவுண்டன்ஸ் ஆபீசராகப் பணி புரிந்து வருகிறார்கள். இவர்கள் இத்துறை முகத்தில் 24 ஆண்டுகளாகப் பணிபுரிந்து வருகிறார்கள். இங்கு வருவதற்கு முன் ஆவடியில் உள்ள "டியூப்ராட்க்ஸ் ஆப் இந்தியாவில்" (டி. ஐ. சைக்கிள் நிறுவனம்) சுமார் 5 ஆண்டு காலம் பணிபுரிந்தார். இவர் எஸ். எஸ். எல். சி பாஸ் செய்ததும் வேலைக்கு வந்து விட்டார். கல்லூரிக்குச் சென்று படித்ததில்லை. வேலையிலிருந்து கொண்டே படித்து பட்டம் பெற்றார். பிறகு „காஸ்ட் அண்டு ஒர்க்ஸ் அக்கவுண்டென்ட் கோர் ஸி;" சேர்ந்து படித்து, அத் தேர்விலும் வெற்றி பெற்றார்.

## வேலை வாய்ப்புச் செய்திகள்.

தினத்தந்தி. தினமணி, தினகரன், The Hindu ஆகிய நாலேடுகளிலிருந்து திரட்டப்பட்ட வேலைவாய்ப்புச்செய்திகள்.

10–6–89லிருந்து வெளிவந்த வேலை வாய்ப்புச்செய்திகள்

1. தேவை: நூற்பாலையில் வேலைக்கு ஆட்கள் தேவை. நேரில் வரவும். C.A.V. காட்டன்மில்ஸ் (பி) லிமிடெட், திருச்சி ரோடு, வடமதுரை.

2. பேரேடு பதிவதில் குறைந்த பட்ச 3வருட அனுபவமுள்ளவர்கள் தேவை. நேரில் வரவும். அழகேந்திரா ஆட்டோ மொபைல்ஸ், 177/1 வடக்கு வெளிவீதி, மதுரை.

3. மதுரை மாவட்டத்திலுள்ள பிரபலமான நூற்பாலைக்கு (I. T. I Elecbnicions (B Licence Holder) வேலைக்கு ஆட்கள் தேவை.

BO × NO: 149 C/O தினத்தந்தி மதுரை.

# நீங்கள் காஸ்ட் அக்கவுண்டேண்ட் சார்ட்டர்டு அக்கவுண்டேண்ட் ஆகவேண்டுமா?

(டீ. சண்முகநாதன் B.A., A.I.C.W.A.,
கொல்லங்குடி அழகாபுரி)

இந்திய நாடு ஒரு தொழில் வளம் மிக்க நாடாக மாறிக் கொண்டு வருகிறது, எங்கு பார்த்தாலும், பெரிய, பெரிய தொழிற்சாலைகளும், பொது நிறுவனங்களும் [Puplic Sector] அமைக்கப்பட்டு வருகின்றன. இவ்வாறு அமைக்கப்பட்டுள்ள நிறுவனங்களும், இனி அமைக்கப்பெற இருக்கின்ற நிறுவனங்களுக்கும் 'காஸ்ட் அக்கவுன்டெண்ட்' 'சார்ட்டர்டு அக்கவுன்டென்ட்' ஆகியோரின் சேவை மிக மிக இன்றியமையாததாகும். மேலும் தற்பொழுது வருகின்ற பெரும்பாலான வேலைவாய்ப்பு விளம்பரங்களில் அக்கவுன்டென்ட் ஆபீசர், அக்கவுன்டென்ட் ஆகிய பதவிகளுக்கு மேலே குறிப்பிட்டுள்ள படிப்புத் தகுதியுள்ளவர்களிடமிருந்தே விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன. சார்ட்டர்டு அக்கவுன்டென்ட் படிப்பதற்கு என்ன தகுதிகள் வேண்டும், விவரக்குறிப்பு (Prospectus) எங்கே கிடைக்கும் என்ற விபரங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

1. காஸ்ட் அக்கவுன்டென்ட்:—

1. பட்ட மேல்படிப்புப் பட்டம் (Post Graduate Degree) வாங்கியவர்கள் அல்லது பட்டப்படிப்பில் மொத்த மதிப்பெண்ணில் 50 சதவிகிதத்திற்கு குறையாமல் மதிப்பெண் வாங்கியவர்கள் நேரடியாகச் சேர்த்துக்கொள்ளப்படுவார்கள்.

2. பட்டப்படிப்பில் 50 சதவிகிதத்திற்கும் குறைவாக மதிப்பெண் பெற்றவர்கள் மற்றும் +2 தேர்வு பெற்றவர்கள் முதலில் தொடக்க நிலைத் தேர்வு (Preliminary Examination) எழுதி அதில் தேர்வு பெற்ற பின்னர் அவர்கள் சேர்த்துக்கொள்ளப்படுவார்கள்.

3. மேலே குறிப்பிட்டுள்ளபடி சேர்க்கப்பட்டவர்கள், தபால் மூலமாகவோ, நேரிடையாகவோ படித்து இடைநிலைத் தேர்வு [Intermediate Exam] எழுதலாம்.

4. இடைநிலைத் தேர்வு எழுதித் தேர்வு பெற்றபிறகு இறுதிநிலைத் தேர்வு (Final Exam) நேரிடையாகவோ தபால் மூலமாகவோ படித்து எழுதலாம்.



வள்ளல் அழகப்பர்



கலைத் தந்தை
கருமுத்து தியாகராசர்



வ.சுப. மாணிக்கனர்

தன் சொத்துக்களை தமிழுக்கு கொடுத்து, தனது உடலை நோய்க்கு கொடுத்த கொடை வள்ளல் வள்ளல் அழகப்ப செட்டியார்

-கவியரசு கண்ணதாசன்

கலைத் தந்தை கருமுத்து தியாகராசர் அவர்களால் தொடங்கப் பட்ட 'தமிழ்நாடு இதழின்' குறிக்கோள் 1 தனித் தமிழ் வளர்ப்பு
2 இந்தி எதிர்ப்பு

கருமுத்து மாணிக்கவாசகம்

மழலைப்பள்ளி முதல் பல்கலைக் கழகம் வரை எல்லாத்துறையிலும தமிழொன்றே பயிற்றுமொழியாதல் வேண்டும். ஆங்கிலப் பள்ளிக் கடைகள் அகற்றப்பட வேண்டும் அப்போதுதான் மாணவ-மாணவியர்க்கு இந்நாட்டுப்பற்றும் பண்பட்ட சமஅறிவும் வளரும்

வ.சுப. மாணிக்கனர்



தமிழண்ணல்



சொ.சொ.மீ. சுந்தரனார்



முனைவர் வீரமுத்துக்கருப்பன்

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவர் தமிழண்ணல் அவர்கள் நெற்குப்பையைச் சார்ந்தவர்

நம்மவர்கள் பெரும் பதவிகளில் இருந்து வருவதற்கு காரணம் அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

தேவகோட்டையைச் சார்ந்த சொ.சொ. மீனாட்சிசுந்தரனார் மதுரை சௌராசுடி கல்லூரி பேராசிரியர். மதுரை நகரத்தார் சங்க செயலாளர் சிறந்த தமிழ் அறிஞர்

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் உயிரியல்பள்ளியின் ஒருங்கிணைப்பாளராகவும், தலைவராகவும் உள்ளவர். பலவான்குடியைச் சார்ந்த வீர. முத்துக்கருப்பன் அவர்கல், இவரை இந்திய தேசிய அறிவியல் கழகம் 1988 அக்டோபர் மாதம் முதல் தனது கழகத்தில் ஆய்வுத் தகைஞராக ஏற்றுக்கொண்டுள்ளது.

5. விவரக் குறிப்பு கிடைக்குமிடங்கள்:—

a. The Secretary,
Institute of cost and works
Accountants of India
No 12, Inder Street
CALCUTTA - 700 016

b. The Chairman
Southern India Regional
Council of the Institute of
Cost and Works Accountants of India,
Monteith Lane
Egmore, Madras - 600 008

c. விலை ரூ. 25/-

2. சார்ட்டர்டு அக்கவுன்டென்ட்:—

i) பட்டப் படிப்பில் 50 சதவிகித மதிப்பெண் பெற்றிருந்தால் நேரிடையாகச் சேரலாம் 50 சதவிகிதத்திற்குக் குறைவாக வாங்கியிருந்தால் தொடக்க நிலைத் தேர்வு (Preliminary Exam) எழுதி தேர்வு பெற்ற பின்னரே சேரலாம்.

ii) மேலே குறிப்பிட்டுள்ள தகுதி உள்ளவர்கள் சார்ட்டர்டு அக்கவுன்டென்டிடம்(ஆடிட்டர்) மூன்று ஆண்டு காலம் பயிற்சி பெற வேண்டும். பயிற்சி பெறும் காலத்தில் முதலாம் ஆண்டில் மாதம் ஒன்றுக்கு ரூ. 150,ம் இரண்டாம் ஆண்டில் மாதம் ஒன்றுக்கு ரூ. 225ம் மூன்றாம் ஆண்டில் மாதம் ஒன்றுக்கு ரூ. 300 வீதம் உதவித்தொகை தருவார்கள்,

iii) இவ்வாறு அவர்களிடம் பயிற்சி பெற்றுக் கொண்டே இடைநிலைத் தேர்வு, பிறகு இறுதி நிலைத் தேர்வு எழுதலாம்.

விவரக் குறிப்பு கிடைக்குமிடங்கள்:

a) The Director,
The Institute of Chartered Accountants of India
Indraprasitha Marg
New Delhi - 110 002

b) The Dy. Director
Southern India Regional Council of the Institute of Charted Accounts of India
122, Nungambakkam High Road
Madras – 600 034

விலை ரூ. 20

வேலையிலிருந்து கொண்டே காஸ்ட் அக்கவுன்டன்சி கல்வி படிக்கலாம். +2 தேர்வு செய்து விட்டு கல்லூரியில் படிக்கும் மாணவ, மாணவியர்கள் படித்துக்கொண்டே இந்த கல்வியையும் படிக்கலாம்.

நம் சமூகத்தைச் சேர்ந்த செல்வந்தர்கள், தொழில் அதிபர்கள் நிதிஉதவி தந்து ஒரு டிரஸ்ட் ஏற்படுத்தி அதன் மூலம் 'காஸ்ட் அக்கவுன்டென்ட்' 'சார்ட்டர்டு அக்கவுன்டென்ட்' படிப்பவர்களுக்கு நிதி உதவி கொடுத்து அவர்கள் படித்திட வழி செய்ய வேண்டும்.

மேலும் முக்கிய நகரங்களில் உள்ள நகரத்தார் சங்கங்கள், நம் சமூகத்தைச் சேர்ந்த ஆடிட்டர்கள் முன் வந்து இந்த டிரஸ்டை அமைத்து அதன் மூலம் பல 'காஸ்ட் அக்கவுன்டென்ட்' 'சார்ட்டர்டு அக்கவுன்டென்ட்' உருவாக வழி செய்ய வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன்.

## விளக்கங்கள்

சாதாரணமாக, நபர்கள் வீட்டுக்கோ திருமணங்களுக்கோ போகிறவர்கள், திரும்பிச்சொல்லும் போது "போய் வருகிறேன்' என்று சொல்லிக்கொண்டு போவார்கள்.

அதன் பொருள், 'இன்னும் பல திருமணங்கள் விழாக்கள் உன் வீட்டில் நடைபெறும்; நாங்கள் மீண்டும் வருகிறோம்' என்பதே.

அமங்கல வீடுகளுக்குச்செல்கிறவர்கள், திரும்பும் போது "போகிறேன்' என்று சொல்லிக்கொண்டு போவார்கள்.

அதன் பொருள் "இனி உன் வீட்டில் அமங்கலம் நேராது, நாங்கள் வரவேண்டியதாயிருக்காது' என்று நம்பிக்கை யூட்டுவதாகும்.

மணமக்களை, 'பதினாறும் பெற்றுப் பெரு வாழ்வு வாழ்க' என்று ஏன் வாழ்த்துகிறார்கள்?

உலகத்திலுள்ள வாழ்க்கைப் பேறுகள், இந்துக்களால் பதினாறு வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

அவை மக்கட்பேறு, செல்வப்பேறு, உடல் நலம் எனப் பதினாறு வைகையாக விரியும்,

மணமக்கள் அவ்வளவு சுகமும் பெற வேண்டும் என்பதையே இந்துக்கள் 'பதினாறும் பெற வேண்டும்' என்று குறிப்பிடுகிறார்கள்.

'ஆல் போல் தழைத்து, அருகு போல் வேரோடி என்று ஏன் குறிப்பிடுகிறார்கள்?

நூற்றுக் கணக்கான ஆண்டுகள், விழுது விட்டு விழுது விட்டு தலைக்கும் மரம் ஆலமரம் ஒன்று தான்!

ஓரிடத்தில் முளைக்கும் அருகம்புல் அத்தனையையும் ஒருங்கு சேர்ப்பது ஒரே வேர் தான்.

இப்படித் தழைத்து நிற்பவை, வேரோடு வாழ்பவை பெருமைக்குரிய பேறுகள் அனைத்தையும் மங்கல வழக்கில் சேர்த்தார்கள்.

கணவனின் பெயரை மனைவி சொன்னால் கூட மரியாதையும் குறையும், மங்கலமும் குறையும்' என்று நம்பினார்கள்.

யாராவது ஒருவர் தும்பினால், பக்கத்தில் இருக்கிறவர்கள் வாழ்க என்பார்கள்.

''தும்மினேனாக வழுத்தினாள்' என்றான் வள்ளுவன் தும்மும்போது சிலர் 'நூறு வயது' என்பார்கள்.

எங்கள் பாண்டிய நாட்டில் பிச்சைக்காரர்கள் வந்து சோறு கேட்கும்போது, சோறு இல்லை என்றால் 'இல்லை என்று சொல்ல மாட்டார்கள்.

'நிறை இருக்கிறது; நாளைக்கு வா' என்பார்கள்.

தீபத்தை அணைக்கச் சொல்லும் போது 'அணையுங்கள்' என்று சொல்ல மாட்டார்கள் 'வளர்த்துவிடு' என்பார்கள்.

வீட்டில் ஒருவர் இறந்து விட்டதை குறிக்கும்போது 'சிவலோக பதவியடைந்தார்; பரலோக பிராப்தியடைந்தார் என்பார்கள்.

பெண் ருதுவாதைப் 'பூப்படைந்தாள், புஸ்பவதியானாள்' என்பார்கள்.

அதாவது 'பெண் மொட்டாக இருந்து புஸ்பம் போல் மலர்ந்திருக்கிறாள்' என்பது தான் பொருள்.
மணமக்களின் முதலிரவைச்சாந்தி மூகூர்த்தம் என்பார்கள்.

'காதலில் துடித்துக் கொண்டிருந்த உள்ளம், ஆசைகளை அடக்கி கொண்டிருந்த உடம்பு அன்றைக்குச் சாந்தியடைகிறது' என்பது அதன் பொருள்.

இந்துக்கள் கூறும் ஒவ்வொழு வார்த்தையிலும் மங்கலமே நிறைந்திருக்கும். நான் சொல்வது சராசரி இந்துக்களை.

ஆத்திரக்காரர்கள் அமங்கலமாகப் பேசுவது இந்துக்களின் மரபைச் சேர்ந்ததல்ல.

நன்றாக வாழ்கிற பெண்ணை எங்களுரில் 'வாழ்வரசி என்பார்கள்' கொச்சைத் தமிழில் 'வாவரசி' என்பார்கள்.

பெரும்பாலான இந்து சமூகங்களில், ‚கணவனை இழந்த பெண் வெள்ளைச் சேலை அணிய வேண்டும்' என்று விதி வகுத்து வைத்திருப்பது ஏன்?

'அவள் கணவனை இழந்தாள், என்று தனித்துக் காட்டுவதற்காகவும், கணவனை இழந்தும் 'தூய்மையானவள் என்று குறிப்பதற்காகவும்.

ஆக, மங்கல மரபு அல்லது வழக்கு என்பது வாழ்க்கையில் நம்பிக்கையையும் உற்சாகமும் உண்டாவதற்காகவே.

கண்ணதாசனின் "அர்த்தமுள்ள இந்துமதம்"
நூலிலிருந்து தஞ்சை. பழ. வள்ளியப்பன்.





# செந்தமிழ் இசை வளர்த்த செட்டி நாட்டு அரசர் இல்லத் திருமணம்

நாள்: 7—6—89

தமிழ் வளர்த்த ராயவரத்தில், தமிழிசை வளர்த்த, செட்டி நாட்டரசர் திரு. எம் எ. முத்தையா செட்டியார் அவர்களின் பேரனும் குமாரராஜா எம்.எ.எம். முத்தையா செட்டியார் அவர்களின் செல்வருமான அண்ணாமலை BEMS அவர்களுக்கும் ராயவரம் எம்.எ.எம் பழனியப்ப செட்டியார் அவர்களின் பேத்தியும், பி எல். சுப்பிரமணியன் செட்டியார் அவர்களின் செல்வியுமான கண்ணம்மை B.A., அவர்களுக்கும் திருமணம் செட்டி நாட்டுத் திருவிழாவைப் போல் 7—6–89 திங்கள் கிழமையன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. மாப்பிள்ளை அழைப்பு மிகச் சிறப்பாக இருந்தது.

இத்திருமணத்தில் மத்திய உள்துறை இணை அமைச்சர் ப. சிதம்பரம் அவர்கள், கருப்பையா மூப்பனார் அவர்கள், பழனியாண்டி அவர்கள், திருவாளர்கள் முன்னாள் அமைச்சர் திருநாவுக்கரசு, நல்லுச்சாமி, தர்மலிங்கம், உயர்நீதிமன்ற நீதிபதி கோகுலகிருட்டிணன், நீதிபதிகள் ரத்தினவேல் பாண்டியன், ராமசாமி, நடராசன், சென்னை காவல்துறை அதிகாரிகள் (டி.ஐ.ஜி) காசி மற்றும் அரசியல் கட்சி பிரமுகர்கள், நகரத்தார் பிரமுகர்கள், எழுத்தாளர்கள், கவிஞர்கள், பேராசிரியர்கள், நாளேடு, மாதஏடு ஆசிரியர்கள், வெளிநாட்டுப் பிரமுகர்கள், அதிகாரிகள், நகரத்தார் சங்க நிருவாகிகள் மற்றும் பலரும் கலந்து கொண்டு மணமக்களை வாழ்த்தினார்கள். ராயவரமே மக்கள் கடலால் நிறைந்து காணப்பட்டது. வரவேற்பும் சிறப்பாக இருந்தது.

— சுப. செந்தமிழன்

நமது செய்திகள்:

1. நாட்டரசன்கோட்டை தீர்த்தார்குளம் தேசிய விநாயகர் கோவிலின் மண்டலாபிசேக விழா 14—6—89 அன்று நடைபெற உள்ளது.

2. ஒன்பது நகரக் கோவில்களில் ஒன்றான இரணிக் கோவிலின் குடமுழுக்கு நன்னீராட்டு விழா 1—2—90 வாக்கில் நடைபெற உள்ளது.

3. காவிரிப்பூம்பட்டினத்தில் 6—8—89 (ஆடிமீ 22உ) முதல் 17—8—89 (ஆவணி மீ) வரை பட்டினத்தடிகளின் விழா சிறப்பாக நடைபெற உள்ளது.

4. வயிரவன்பட்டிக்கு அண்மையிலுள்ள மக்கமடை அய்யனார் கோவில் குட நீராட்டு விழா சுக்கில ஆண்டு ஆனிமீ 8 உ (22-6-89) வியாழக்கிழமை நடைபெற உள்ளது.

5. சோழபுரம் அருள்மிகு அருள்மொழிநாத – அறம் வளர்த்தாள் திருக்குட நன்னீராட்டு விழா ஆவணிமீ 25உ செப்டம்பர் 10—9—1989 ஞாயிற்றுக்கிழமை நடைபெற உள்ளது.

பொதுச் செய்திகள்: மே-சூன் 1989

தினமணி, தினகரன், தினத்தந்தி நாளேடுகளிலிருந்து
26—5—89 அ. ரசியாவின் ஆட்சி முறையில் மாற்றம். அமெரிக்காவிலுள்ளது போல் சனாதிபதி ஆட்சி முறை ரசியாவில் 25—5—89 அன்று அமுலுக்கு வந்தது. சனாதிபதியாக கார்பசேவ் பொறுப்பு ஏற்றார்.

ஆ. 18 வயதானவர்களுக்கு வாக்குரிமை வழங்கும் மத்திய அரசின் சட்டத்திற்கு குடியரசுத் தலைவர் ஒப்புதல் இந்தச் சட்டப்படி ஏப்ரல் 1ந் தேதி முதல் 18 வயது அடைந்தவர்கள் தேர்தலில் ஓட்டுப் போடலாம்.

27-5-89 அ. பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார் தனது 82 வயதில் இயற்கை எய்தினார். இவர் 180 புத்தகங்கள் எழுதியுள்ளார்.

ஆ. புரட்சிக்கவிஞர் பாரதிதாசனாரின் துணைவியார் திருமதி பழனியம்மாள் 21—5—89 அன்று தனது 87வது வயதில் புதுவையில் இயற்கை எய்தினார்.

இ. பர்மாவின் பெயர் "மியான்வர்" என மாற்றப்பட்டது. பர்மாவின் தலைநகரம் ரங்கூனின் பெயர் "யான்கோன்" என்று மாற்றப்பட்டுள்ளது. "மோன்மோன்" என்ற பெயர் மவ்லாமியாங் என்று மாற்றப்பட்டுள்ளது. குரோம் என்ற நகரம் பிய் என்றும், அக்யாப் என்ற நகரம் கித்வே என்றும் மாற்றப்பட்டுள்ளது. பர்மாவில் பர்மியர்களைத் தவிர களன், கச்சின், ஷான், கின் ஆகிய மக்களையும் மியான்மா என்ற சொல் குறிக்கின்றது. இதனால் பர்மாவின் பெயர் மியான்மா என மாற்றப்பட்டுள்ளது.

24-5-89 மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் ½ கோடி செலவில் நவீன உயிரியல் தகவல் மையம் செயற்கைகோள் வழியே வெளிநாடுகளுடன் தொடர்பு, இதன் மூலம் வெளிநாடுகளில் கம்ப்யூட்டர்களில் பதிவு செய்து வைக்கப்பட்டிருக்கும் அறிவியல் கண்டுபிடிப்புகள் அறிவியல் செய்திகளைப் பெற முடியும்.

2-6-89 அ. +2 தேர்வில் அதிக மதிப்பெண் வாங்கிய மாணவர்களுக்கு மொத்தம் ரூ. 2 லட்சம் பரிசு வழங்கப்படுமென தமிழ்நாடு முதல்வர் கலைஞர் அறிவிப்பு.

ஆ. இலங்கையிலிருந்து இந்திய அமைதிப் படை அடுத்த மாதம் (சூலை) ஒட்டுமொத்தமாக வெளியேறுமென இலங்கை குடியரசுத் தலைவர் பிரேமதாசா அறிவிப்பு. இந்திய அரசு இலங்கையிலுள்ள அமைதிப்படை வெளியேறாது என்று கூறியுள்ளது.

3-6-89 சத்துணவுடன் முட்டை வழங்கப்பட்டது தமிழ்நாட்டில் 2,300 மதுக்கடைகள் ரூ. 33 கோடிக்கு ஏலம் கண்டம் விட்டு கண்டம் பறந்து சென்று தாக்கும் அக்னி ஏவுகணையை இந்தியா வெற்றிகரமாக 24-5-89 பறக்க விட்டது.

5-6-89 அ. சனநாயகம் வேண்டி போராடிய மாணவர்கள் மீது ராணுவம் பீரங்கித் தாக்குதல் 3000 பேர் பலி.

ஆ. ஈரான் நாட்டு மதத் தலைவர் கோமெனி மரணம்

இ. சப்பானின் புதிய தலைமை அமைச்சர் யூனோ

9-6-89 அரசு ஊழியர்களுக்கு மீண்டும் ஆறு நாள் வேலை.

இரண்டாம் சனிக்கிழமை தவிர மற்ற சனிக்கிழமைகள் வேலை நாளாக அறிவிக்கப்பட்டுள்ளது.

நமது செய்தியாளர்



# சென்னையில் செட்டி நாட்டு அரசர் பேரன் திருமண வரவேற்பு

16-6-89

செட்டி நாட்டு அரசர் முத்தையா செட்டியார் அவர்களின் பேரனும், குமாரராசா எம். ஏ. எம். முத்தையா செட்டியாரின் செல்வருமான அண்ணாமலைக்கும், ராயவரம் பழ. சுப்பிரமணியன் செட்டியார் அவர்களின் செல்வி கண்ணம்மைக்கும் 7-ந் தேதி ராயவரத்தில் திருமணம் நடைபெற்றது. சென்னை ராசா அண்ணாமலை புரத்திலுள்ள செட்டிநாட்டு அரண்மனையில் மணமக்களுக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது. திருவாளர்கள் தமிழ்நாடு ஆளுநர் அலெக்சாண்டர், தமிழ்நாடு முதல்வர் டாக்டர் கலைஞர், தமிழ்நாடு அமைச்சர்கள் அன்பழகன், நாஞ்சில் மனோகரன், சாதிக்பாட்சா, ஆற்காடு வீராசாமி கண்ணப்பன், பொன் முத்துராமலிங்கம், சபாநாயகர் தமிழ்குடிமகன், உச்ச நீதிமன்ற நீதிபதி ரத்தினவேல் பாண்டியன், சென்னை தலைமை நீதிபதி என். மோகன் மற்றும் பலர் வந்து மணமக்களை வாழ்த்தினார்கள் திருவாளர்கள் கருப்பையா மூப்பனார், தமிழ்நாடு இ. காங்கிரஸ் தலைவர் வாழப்பாடி ராமமூர்த்தி அவர்கள், முன்னாள் அமைச்சர்கள் இராமவீரப்பன் திருநாவுக்கரசு ராகவானந்தம், மற்றும் திண்டிவனம் ராமமூர்த்தி ஆகியோர் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினார்கள். தொழில் அதிபர் பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்கள், நல்லி குப்புசாமி, வி ஜி. சந்தோசம், பழ. கருப்பையா, தலைமைச் செயலாளர் ராஜேந்திரன், முன்னாள் மத்திய அமைச்சர் சி. சுப்பிரமணியம், எம்.ஏ. சிதம்பரம், ஏ. சி. முத்தையா மற்றும் பலர் கலந்து கொண்டனர். திரைஉலக பிரமுகர்களும் பெருமளவில் கலந்து கொண்டனர். விழாவிற்கு வந்தவர்களை டாக்டர். எம்.ஏ. எம் ராமசாமி அவர்கள் வரவேற்றார்.

- கா. ராமனாதன், சென்னை-53

குறிப்பு:- செட்டி நாட்டு அரசர் இல்லத்திருமண விழா படங்களை இவ்விதழில் (ஜூன்) வெளியிட விரும்பி படம் பெற முயற்சி செய்தோம். படங்கள் கிடைக்கவில்லை. எனவே ஜூலை இதழில் திருமண விழா படங்கள் வெளிவரும்.

திருமணம்: உ. சிறுவயல் அரு.வயி.வயி.வயி. வயிரவன் செட்டியார் அவர்கள் செல்வன் கருப்பையாவிற்கும் கண்டனூர் க.ப.ராம.பழ. வீரப்ப செட்டியார் செல்வி உமையாளுக்கும், ந. வயிரவன் பட்டியில் ஆனித் திங்கள் 9ஆம் நாள் (23-6-89) வெள்ளிக்கிழமை திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வ.கரு. பழனியப்ப செட்டியார் அவர்கள் வந்திருந்தவர்களை இனிது வரவேற்றார். நகரத்தார் பிரமுகர்கள், அரசியல்வாதிகள் பலரும் கலந்து கொண்டு மணமக்களுக்கு வாழ்த்துரை வழங்கினார்கள்.

## பாவேந்தன் பாரதிதாசன் பிறந்த நாள் விழா.

திருவள்ளுவர் ஆண்டு 2020 வைகாசித் திங்கள் 12ம் நாள் (26—5—89) வெள்ளிக்கிழமையன்று தமிழ்நாடு அரசின் சார்பில் பாவேந்தர் பாரதிதாசன் பிறந்த நாள் விழா பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டத்தைச் சார்ந்த நெற்குப்பை கிராமத்தில் சிறப்பாக நடைபெற்றது. மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. இல. பழமலை அவர்கள் தலைமை ஏற்க, நாடாளுமன்ற உறுப்பினர் திரு. தா. கிருட்டிணன் அவர்கள் முன்னிலையில் திரு.எஸ்.எஸ். தென்னரசு அவர்கள் சிறப்புரையாற்றினார். மாவட்ட குற்றவியல் நீதிபதி திரு. துரை கலியரெத்தினம் அவர்கள், நெற்குப்பை ஊராட்சி ஒன்றியத் தலைவர் அ குமரப்பன் அவர்கள், மாவட்ட ஆட்சியரின் நேர்முக உதவியாளர் திரு. நடேசன், திரு. சு. கிருட்டிணன் அவர்கள் மற்றும் பலர் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார்கள். விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது.

### கும்பகோணம் நாட்டுக்கோட்டை நகரத்தார் அறக்கட்டளை 36, தெற்குவீதி, சுவாமிமலை

சுவாமிமலை நகர மடத்திற்கு புதியதாகச் செய்யப்பட்ட அருள்மிகு சுப்பிரமணியசுவாமியின் புதிய விக்கிரஹம் சுக்கில வருடம், ஆனி மீ 7ஆம் நாள் (21—06—1989) புதன்கிழமை காலை 7-00 மணிக்கு மேல் 7-30க்கு பிரதிஷ்டை செய்து குடமுழுக்கு விழா சிறப்பாக நடைபெற உள்ளது. 19—6—89 திங்கள் கிழமை தொடங்கி 21—6—89 வரை திருப்ப விழா சிறப்பாக நடைபெறஉள்ளது.

# வேலை வாய்ப்புச் செய்திகள்.

1. தேவை: அனுபவமிக்க இளம் வயதுள்ள ஆண் டைப்பிஸ்ட்டுகள் தேவை

முகவரி: TM ஜம்புலிங்கம், இன்சினியர், அண்ணா நகர், மதுரை

2. தேவை: ராலீஸ் இந்தியா லிமிடெட்டின் தரமான வீட்டு உபயோக பூச்சி மருந்துகளை வீடு வீடாகச் சென்று விற்பதற்கு கான்வாசர்கள் தேவை.

முகவரி: ராலீஸ் இந்தியா லிட், 197, பெரியாத வீதி, திருப்பரங்குன்றம், மதுரை

3. மதுரையிலுள்ள கட்டிடச் சாமான்கள் விற்பனை செய்யும் நிறுவனத்திற்கு முன் அனுபவம் உள்ள உள்ளூர் வாசிகள் தேவை. தகுதிக்கேற்ப சம்பளம்.

1) ஸ்டெனோகிராபர் 2) டைப்பிஸ்ட் 3) கணக்கர்கள் 4) ஆபீஸ்பாய் பெட்டி எண் 153 C/o தினத்தந்தி, மதுரை-1

## அட்டைப்பட விளக்கம்.

முன் பக்கத்திலுள்ள அட்டைப் படத்தில் மின்சாரம், திரைப்படம், கிராமபோன் ஆகியவற்றை கண்டுபிடித்த தாமசு ஆல்வா எடிசன், தொலைக்காட்சியைக் கண்டு பிடித்த பியர்டு, வானொலியைக் கண்டுபிடித்த மார்கோனி ஆகியோர்களின் படம் வெளியிடப்பட்டுள்ளது.

## கூட்டுத்திருமணம்:

சுக்ல ஆண்டு ஆவணி மாதம் 22ம் நாள் (07—09—89) வியாழக்கிழமை பிள்ளையார்பட்டியில் சிறப்பாக நடைபெற உள்ளது. விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றது.

முகவரி: செயலாளர், 2, ஒத்தமால் தெரு, திருச்சி-620 002

